[6th September 1960

*Tea Estate (Periyakulam)*

* 463 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா பெரியகுளம் தாலுக்காவில் உள்ள ஹைவேஸ் தேயிலை எஸ்டேட்டுக்கு பாரஸ்ட் நிலத்தில் எத்தனை ஏக்கர் குத்தகைக்கு விடப்பட்டது ?

(ஆ) அந்நிலங்களுக்கு வருடத்திற்கு என்ன குத்தகை வாங்கப்படுகிறது ?

(இ) மொத்தம் எத்தனை ஏக்கர் தேயிலை பயிரிடப்படுகிறது ?

(ஈ) இப்படி பாரஸ்ட் நிலத்தில் மற்றவர்களுக்கும் குத்த கைக்கு விட உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) An area of 9,894 acres and 62 cents in Narayanathevanpatti village (Cumbum Range) was assigned to the Highway Tea Estate;

(*b*) the question of collection of rent does not arise, as this is not a lease;

(*c*) 1,279·46 acres; and

(*d*) there are no fresh proposals to grant leases of forest lands *for tea cultivation*. But, there is a proposal to lease out suitable areas in Cumbum Range for cardamom cultivation.

SRI N. R. THIAGARAJAN : நாராயணதேவன்பட்டி கிராமம் மாத்திரம் இல்லாமல் நரசிங்க கிராமத்திலும் தேயிலைத் தோட்டம் பயிர் செய்யப்படுகிறது. இதைத் தவிர வேறு யாரேனும் தேயிலைத் தோட்டம் வைக்கவேண்டுமென்றால் இதைப் போலக் குத்தகைக்கு கொடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முன்பு தேயிலைத் தோட்டம் விருத்தி செய்யவேண்டுமென்ற நோக்கத்தோடு கொடுக்கப்பட்டது. இப்போது அதேமாதிரி கேட்பவர்களுக்கு எல்லாம் கொடுப்பதாக உத்தேசம் இல்லை.

*Ambar charka*

* 464 Q.—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கதர், கிராமக் கைத்தொழில் போர்டிலிருந்து இதுவரை நம் மாநில அரசாங்கத்துக்கு அம்பர் சர்க்கா அபிவிருத்திக்காக எவ்வளவு ரூபாய் அனுமதிக்கப்பட்டிருக்கிறது ?

(ஆ) அந்தத் தொகையில் எவ்வளவு இதுவரை மாநில அரசாங்கத்தாரால் பயன்படுத்திக் கொள்ளப்பட்டிருக்கிறது ?

(இ) மீதமிருக்கும் தொகையைப் பயன்படுத்த அரசாங்கம் என்ன திட்டமிட்டிருக்கிறது ?